<u>கணபதி காப்பு</u>

கணபதி என்றால் என்ன ?
கணம் + பதி = கணபதி

**கணபதியின் ததுவம் தான் என்ன ?**
கணங்களுக்கு தலைவன் என்று பொருள்
**கணங்கள் : கூட்டம் , விண்மீன் கூட்டம் .**
**பதி : தலைவன் ,கணவன் ,அரசன் ,கோயில் ,ஊர் ,உறைவிடம் ,கடவுள் ,குரு.**

இவரை **முதல் கடவுள்** என்றும், **ஞான கடவுள்** என்றும் கூறுவர் முன்னோர்கள் கூறுவார்கள்

**இவரை முதல் கடவுள் என்று சொல்வதற்க்கு என்ன காரணம் ?**

கணபதியின் உருவம் ( **ஓம்காரம் அல்லது ஓங்காரத்தின்** ) வடிவம் ஆகும்.
கணபதியின் உருவம் ( **மனித உடல் + யானையின் தலை** ) பொருந்திய உருவம் ஆகும்.

**ஓங்காரம் என்றால் என்ன ?**

**ஓ** என்ற எழுத்தை நன்றாக பாருங்கள் இந்த எழுத்து **முதலில் ஒரு சிறு புள்ளியாகவும் பிறகு ஓங்கி வளைந்து மீண்டும் சுருங்கி பெருத்து மீண்டும் சிறு புள்ளியிலே முடியும்.**

இந்த எழுத்தில் தொடக்கமும் முடிவும் ஒரே இடத்தில் தான் முடிவது போன்றதாக இருக்கும். புள்ளியில் தொடங்கி புள்ளியிலே முடியும் .

******

**இந்த ஓங்காரம் அல்லது ஓம்காரம் என்ன சொல்கிறது ?**

ஒரு விதை எப்படி தன்னில் பல கோடி மரங்களை மறைத்து வைத்து இருக்கிறதோ அதை போன்று தான் இந்த **ஓங்கார** தத்துவமும் கூறுகிறது.

விதையின் அளவோ சிறியது ஆனால் அதனுள் எண்ணற்ற மரங்கள் , பூக்கள் ,காய்கள் , கனிகள் ,சுவைகள் . இவை அனைத்தும் ஒவ்வொரு தன்மை கொண்டது.

இதனை சிலர் **ஒளி , ஒலி** என்றெல்லம் கூறுவர் இந்த கூற்று இன்னொரு தத்துவத்தில் விளக்கமாக சொல்லப்படும் .

******

**கணபதியின் உருவ தத்துவம் என்றால் என்ன ?**

இரண்டு கைகள் கொண்ட கணபதி இருக்கிறார் அவரை தான் முதன் முதலில் வணங்கினார்கள் அந்த உருவத்திற்க்கு அர்த்தம் என்னவென்றால்.

“**அவர் ஒரு கையில் அச்சானியும், மற்றொரு கையில் ஓலைச்சுவடி வைத்து இருப்பார்”** - ஒரு ஆசிரியர் அல்லது குரு மாணவனுக்கு அறிவை பகிருதள் அல்லது அறிவு என்றால் என்ன என்பதை சொல்லவது போன்று இருக்கும்.

(or)

“**அவர் ஒரு கையில் சிவலிங்கம் , மற்றொரு கையை மறைத்து வைத்து இருப்பார் அல்லது ஓலைச்சுவடி வைத்து இருப்பார் ”** - ஒரு ஆசிரியர் அல்லது குரு மாணவனுக்கு மறைப்பொருளை போதிக்கும் வகையில் போன்று இருக்கும்.

**ஞான கடவுள் என்று அழைப்பதற்க்கு காரணம் என்ன ?**

ஞானம் + கடவுள் = ஞானக் கடவுள் .
ஞானம் : அறிவு , கல்வி.

**அறிவு என்றால் என்ன ? இதற்க்கு பதில் உங்களிடம் தான் உள்ளது.**

**கணபதி வழிபாடு** : எந்த ஒரு செயலை செய்யும் முன் இவரை தான் வணங்க வேண்டும் என்று முன்னோர்கள் கூறினார்கள். முன்னரே கூறியது தான் இவர் **அறிவு / ஞான கடவுள்** என்று.

## <u>உலக வாழ்க்கையில் கணபதி தத்துவம்</u>

இந்த கணபதி வழிபாடு தெளிவை தரும் என்றும் சிலர் கூறுவர்.

**தெளிவு என்றால் என்ன ?**

**இருளில்** இருந்த எனக்கு **ஒளி** கிடைத்தது அதனால் எனக்கு தெளிவு கிடைத்தது என்று கூறுவர். ஒரு செயலை செய்யும் முன் அவனுக்கு அந்த செயலை பற்றின தெளிவு மிக்க முக்கியம் என்றும் கூறுவர்

**ஒரு மனிதன் எந்த ஒரு செயலை செய்யும் முன்னர் அந்த செயலை சார்ந்த தகவல்களை சேகரிக்கா வேண்டும் அப்படி அவர் செய்யாவிடில் அந்த செயல் வெற்றியுடன் முடியாது , செயல் தடைபபட்டுவிடும்.**

**இவ்வாறு அந்த மனிதன் சேகரித்த தகவல்கள் எல்லாம் அவனுக்கு அந்த செயலை பற்றின தெளிவான பாதயை காட்டும். தெளிவான பாதையே செயல வெற்றியுடன் முடிக்க உதவும் .**

**“எந்த செயல் செய்தாலும் அந்த செயலிற்க்கான அறிவை பெற்றால் தான் செய்து முடிக்க முடியும்”**

*******

கணபதியின் சொரூபாம் சாந்த சொரூபம் . இந்த சாந்த சொரூபாம் அமைதியை குறிக்கும் எந்த ஒரு படபடப்பு , ஆரவாரம் இன்றி இருக்கும் யானையும் அப்படி தானே இருக்கும் வருவதும் தெரியாது போவதும் தெரியாது.

******

## <u>மெய்ஞான பாதையில் கணபதி தத்துவம்</u>

கணபதியின் உருவம் ஓங்காரத்தை குறிக்கும் ஓங்காரம் என்றால் என்ன எனபதின் விளக்கத்தை முன்னரே கூறினோம்.

கணபதியின் உருவமைப்பு ( **அருவம் (அ) அரு )** , **( அருவுருவம் (அ)அருவுரு )** , **( உருவம் (அ) உரு )** என்பதை விளக்கும்.

**அருவம் : உருவமின்மை .**

உருவாமின்மை என்றால் என்ன ?
உருவம் + இன்மை ( இல்லாமை , இல்லை, இலாதது ) = உருவமின்மை
**உருவமின்மைக்கு எடுத்துக்காட்டு நீங்களே கண்டு அறிய வேண்டும்.**
கண்ணுக்கு தெரியாதவை எல்லாம் உருவமின்மை என்று கூறக்கூடாது அவை எல்லாம் **நுண் வடிவம்** கொண்டது.
அருவம் எது என்று அறிந்தால் தான் வேதமும் , மெய் ஞானமும் புரியும்

******

**அருவுரு : அரு என்றும் உரு என்றும் சொல்லத்தகாதது அல்லது சொல்லமுடியாதவை.**

**எந்த ஒரு பொருளையோ அல்லது ஒன்றையோ அருஉரு என்று கூறுவர்?**
இருப்பது போன்று இருக்கும் ஆனால் இருக்காது. சிலசமயம் கண்ணுக்கெல்லாம் புலப்படும் ஆனால் இருக்காது.

**எடுத்துக்காட்டு** : பஞ்ச பூதத்தில் ( **நிலம் , நீர் , நெருப்பு , காற்று , ஆகாயம்** ) இருக்கிறது. நன்றாக சிந்தித்து அறியுங்கள்

******

**உருவம் : வடிவம் , உடல்.**

கண்ணுக்கு புலனாக கூடியது எல்லாம் உருவம் என்று சொல்லிவிடலாம் . அல்லது முதலும் முடிவும் அறிந்தால் அவற்றை உருவம் என்றும் கூறலாம் .

இந்த உருவம் எப்படி வந்தது என்று சிந்தித்தால் தான் முழுமையான விடை கிடைக்கும்

******

கணபதியின் உருவம் பெருத்து அகண்ட வயிறு , துதிக்கை. இந்த கணபதி உருவத்திற்க்கு பலவிதமான மெய்ஞான கருத்துகள் இருக்கிறது அதனிய இப்பொழுது பார்ப்போம்.

## <u>தத்துவம் ஒன்று</u>

பிரபஞ்ச தத்துவம் என்று நாம் முன்னோர் கூறுவர் . பிரபஞ்சம் எப்படி பெருத்து , படர்ந்து , விரிந்து தன் இருப்பதை காட்டிக்கொள்ளாமல் தன்னிடம் இருப்பதான சூரியன் ,சந்திரன் , நட்சத்திரம், பஞ்ச பூதம் இவற்றை மட்டும் காட்டுதோ அது போன்றது தான்.

## தத்துவம் இரண்டு

யோக தத்துவத்தில் **கணபதியை** மனிதனின் உடல் பாகமாகவும் முன்னோர் கூறுவர்.

**துதிக்கை** : உடலின் மூலாதாரம் முதல் மூளையின் கீழே உள்ள எலும்பு வரை.

**மனிதனின் மூளை** : கணபதியின் காது , முகம் ,மூளையின் பின்புறம் கீழே உள்ள எலும்பு வரை.

**மனிதனின் பிருட்டம் முதல் தலை பாகம் வரை** : கணபதியின் முழு உருவம்.

**கணபதியின் தந்தம்** : பிறை நிலவை குறிக்கும்.

**கணபதி வடது கையில் இருக்கும் சிவஇலிங்கம்** : வேதம் கூறும் மறைப்பொருளான சிவத்தை விளக்கும்.

**கணபதி இ டது கையை மறைத்து வைத்து இருப்பார்** : மறைந்து இருக்கும் அறிவை அல்லது அறியாமையை அல்லதை சிவத்தை விளக்குவதாக கூறுவர்.